Sri V. SUBBIAH : *ஜில்லா போர்டுகளில் பணம் இல்லையென்ற நிலைமை இருப்பதால் பணத்தைக் கொடுத்து அவர்களையேச் செய்யச் சொல்வதைவிட, நேஷனல் ஹைவேஸ், பப்ளிக் வொர்க்ஸ் மூலமாக சர்க்காரே எல்லா ரோடுகளையும் எடுத்துக் கொள்ளும் உத்தேசம் உண்டா ?*

The Hon. Sri C. SUBRAMANIAM : *பஞ்சாயத்துச் சட்டம் நிறைவேறும்போது இதைப் பற்றி விவரித்துக் கூறியிருக்கிறேன். எந்த எந்த ரோடுகளை சர்க்கார் எடுத்துக் கொள்ளும், எந்த எந்த ரோடுகளின் பொறுப்பு பஞ்சாயத்து யூனியனுக்கும், எந்த எந்த ரோடுகள் கிராம பஞ்சாயத்தின் நிர்வாகத்திலும் வரும் என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது.*

Sri M. R. KANDASWAMI MUDALIYAR : *பிர்கா அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் மண் ரோடுகள் போடப்பட்டன. உடனே கப்பி போட முடியாத காரணத்தினால் அவை அப்படியே விடப்பட்டு, இன்று வண்டி கூடப் போவதற்கு முடியாமல் இருக்கின்றன. ஆகவே கிராம ரஸ்தாக்களை சர்க்கார் அபிவிருத்தி செய்ய முன் வருவார்களா ?*

The Hon. Sri C. SUBRAMANIAM : *பஞ்சாயத்து யூனியன் திட்டத்தின்கீழ் எடுத்துக் கொண்டு அவைகளை நல்லமுறையில் நடத்த முடியும் என்று நினைக்கிறேன்.*

*State Trading Scheme*

* 162 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state the details of the State Trading Scheme decided by the National Development Council in the first week of November 1958?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The details of the Scheme of State Trading in foodgrains are being worked out by the Government of India and they are awaited.

Sri N. K. PALANISAMI : *ஸ்டேட் ட்ரேடிங் என்று சொல்லிக் கொண்டு 2 லட்சம் டன் கொள்முதல் செய்தவுடன் பாக்கியைக் கொள் முதல் செய்ய லைசென்சு வழங்கப்படுமா ? அல்லது எல்லாவற்றையும் சர்க்காரே கொள்முதல் செய்வார்களா ?*

The Hon. Sri M. BHAKTAVATSALAM : *இதில் கனம் அங்கத்தினருக்கு எப்படி ஐயம் எழுந்தது என்று தெரியவில்லை. இந்தத் திட்டத்தின் விவரங்கள் எல்லாம் இப்போதுதான் பரிசீலனையில் இருப்பதாகக் கூறினேன். அதற்கு முன்னதாக 2 லட்சம் டன் வாங்குவதாக ற்பாடு.*

Sri S. LAZAR : *இது சம்பந்தமாக நமது அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு ரிப்போர்ட் தயாரித்துக் கொடுத்திருக்கிறதா ? அதன் அம்சம் என்ன ?*

The Hon. Sri M. BHAKTAVATSALAM : *இந்த அரசாங்கம் ஸ்டேட் ட்ரேடிங் பற்றி எப்படி திட்டம் வகுப்பது என்று குறித்து மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறது. இதுவெல்லாம் பரிசீலனை செய்து முடிவு செய்கிற வரையில் அதைப்பற்றி வெளியிடுவது உசிதம் இல்லை.*

Sri S. M. ANNAMALAI : *கம்பு, சோளம், போன்ற பொருள்களின் விலையும் ஏறியிருக்கிறது. அவைகளையும் கூட வாங்குவதற்கு இந்தச் சர்க்கார் முன் வருமா ?*

The Hon. Sri M. BHAKTAVATSALAM : *அவைகளை வாங்குவது என்ற யோசனை அரச ங்கத்தினிடம் இல்லை.*

10th February 1959]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know when this is likely to be finalised? After finalisation, will the Government be pleased to place a copy of the scheme on the table?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I cannot say when the State Trading Scheme will be finalised. It is being worked out and as soon as it is finalised certainly a copy will be placed on the table of the House.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, நெல், அரிசி கொள்முதல் செய்வதில் முதல் ரேட்டாக, கடைசித் தரத்தில் இருந்து வி. 20 ரகத்தை மாற்றியிருக்கிறார்கள். ஆனால் தஞ்சாவூரில் கட்டைச் சம்பா நெல் அதிகம் விளைகிறது. அதை இரண்டாம் தரம் என்று நிர்ணயித்து விலையை குறைத்திருக்கிறார்கள். அதையும் உயர்த்த அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதிகமாக ஒரு ரகத்தை உற்பத்தி செய்வதனால் மட்டும் விலையை உயர்த்த முடியாது. தனித்தனியாக அந்த அந்த ரகத்தைப் பிரித்திருக்கிறார்கள். வியாபாரிகளையும், உற்பத்தி செய்கிறவர்களையும் சிவில் சப்ளை அதிகாரிகள் கலந்து கொண்டு நிர்ணயிப்பது.

*Economic prices for agricultural produce*

* 163 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any decision has been taken at the meeting of the National Development Council held in November 1958 to guarantee minimum economic prices for agricultural produce; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) In view of the answer to (*a*) above, this question does not arise.

SRI N. K. PALANISAMI : பதினைந்து ரூபாய், பத்தொன்பது ரூபாய் என்று ஒரு மணங்குக்கு நிர்ணயம் செய்திருக்கிறார்கள். அது அவசியமா ? ஹோல் சேலாக இரண்டு லட்சம் டன் வாங்கினவுடன் நிறுத்தி விடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : செய்யப்பட்டிருக்கிற விலை நிர்ணயம் இரண்டு லட்சம் டன் வாங்குவதற்காக மட்டும் அல்ல. மொத்தமாக விலை நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஹோல்சேல் விலை. ஏஜெண்டுகள் மூலமாகத்தான் விற்கவேண்டும் என்பது இல்லை. உற்பத்தியாளர்கள் நேரடியாக அரசாங்கத்திடமே விற்கலாம்.

SRI T. SAMPATH : May I know on what basis prices of paddy and rice were fixed? Have Government any intention of fixing floor prices for paddy and rice?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have taken into account the price factors prevailing in the Southern States and fixed maximum prices.